(சு-ம்.)

*அ. ஞானத்தில் சத்துச் சித்து ஆநந்தவடிவமான பிரஹ்மத்தின் ஸ்வபாவங்கள் அகண்டைகரஸவடிவத்தன்மையினை அடைந்து விளங்குகின்றன; பேதமாக விளங்குகிறதில்லை; ஏனெனின், பேதத்தைச் செய்யும் உபாதிகளின் நிஷேதமிருக்தலால். (ஙக)

ங. பிரஹ்மாம்சத்தினைப் பேதிக்கும் உபாதி(விருத்தி)யும் அதனைப் பரிகரிக்கும் உபாயமும்.

[கடுசுஎ] शांता घोराः शिलाद्याश्च भेदकोपाधयो मताः ।
योगाद्विवेकतो वैषामुपाधीनामपाकृतिः ॥ ३२ ॥

(அ-கை.)

"பேதிக்கும் உபாதிகளின் நிஷேதத்தால்" என்று கடுசுஎ-வது சுலோகத்திற் சொல்லப்பட்டது. அந்தப் பேதிக்கும் உபாதிகளையே கூறுகின்றார்:—

शांताः घोराः च शिलाद्याः भेदकोपाधयः मताः ॥

(சு-ம்.)

சாந்தவிருத்திகளும், கோரவிருத்திகளும், மூடக்கல்முதலியனவும் பேதிக்கும் உபாதிகளாக மதிக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

இவ்வுபாதிகளின் நீக்கம் எந்த உபாயத்தினால் நீங்குமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

योगात् वा विवेकतः एषां उपाधीनां अपाकृतिः ॥

(சு-ம்.)

சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மைவடிவ யோகத்தினால் அல்லது விவேகத்தினால் இவ்வுபாதிகளின் நீக்க முண்டாகின்றது. (ஙஉ)

---

*அ முதல் தியானகாலத்தில் சத்து சித்து ஆநந்தம் என்னும் பிரஹ்மத்தின் சுபாவங்கள் உபாதிகளின் பேதத்தால் வேறுவேறாகத் தோற்றுகின்றன. பின் தியானத்தின் அப்பியாசத்தினால் ஏகாக்கிரமாகிய சித்தத்தில் விசாரத்தினால் உபாதிகள் நீங்குதலால் சச்சிதாநந்தங்கள் அகண்ட ஏகரஸமாய்த் தோற்றுகின்றன. ஆதலால் இது பிரஹ்மவித்தையேயாம்; தியானம் (உபாசனை) அன்று என்பது பொருள்.

௪. பலிதார்த்தத்தினைக் கூறுதல்.

[௧௩௪௮] निरूपाधिब्रह्मतत्त्वे भासमाने स्वयंप्रभे ।
अद्वैते त्रिपुटी नास्ति भूमानंदोऽत उच्यते ॥ ३३ ॥

(அ-கை.)

பலிதார்த்தத்தினைக் கூறுகின்றார்:—

स्वयंप्रभे अद्वैते निरूपाधिब्रह्मतत्त्वे भासमाने त्रिपुटी न अस्ति । अतः भूमानन्दः उच्यते ॥

(சு-ம்.)

சுவயம்பிரகாசமும் அத்வைதரூபமுமாகிய நிருபாதிகப்பிரஹ்மதத்துவம் தோற்றுங்கால் திரிபுடி தோற்றுகிறதில்லை. ஆதலால் இந்தப் பூமாவாகிய பிரஹ்மம் ஆநந்த மெனப்படுகின்றது.

(வி-ம்.)

ஞாதா, ஞானம், ஞேய மென்னும் திரிபுடியின் தோற்றமின்மையால் இந்தப் பூமா அதாவது தேசகாலவஸ்துவினாலாகிய பரிச்சேதமின்றிய பிரஹ்மம் ஆநந்த மெனப்படுகின்றது. (௩௩)

௫. கிரந்தத்தின் சமாப்தி.

௧௩௪௯] ब्रह्मानंदाभिधे ग्रंथे पंचमोऽध्याय ईरितः ।
विषयानंद एतेन द्वारेणांतः प्रवेश्यताम् ॥ ३४ ॥

(அ-கை.)

கிரந்தத்தினை முடிக்கின்றார்:—

ब्रह्मानन्दाभिधे ग्रंथे पञ्चमः अध्यायः ईरितः विषयानन्दः एतेन द्वारेण अन्तः प्रवेश्यताम् ॥

(சு-ம்.)

பிரஹ்மாநந்த மென்னும் ஐந்து அத்தியாயவடிவ கிரந்தத்தில் ஐந்தாவது அத்தியாயம் கூறியது விஷயாநந்தமாம். இவ்விஷயாநந்தவடிவவாயிலால் பிரஹ்மாநந்தத்தினுள் பிரவேசிக்குக. (௩௪)

௬. கிரந்தத்தின் முடிவில் ஆசீர்வாதவடிவ மங்கலம்.

[கடுள௦] प्रीयाद्धरिहरोऽनेन ब्रह्मानंदेन सर्वदा ।
पायाच्च प्राणिनः सर्वान्स्वाश्रितांश्छुद्धमानसान् ॥ ३५ ॥

(அ-கை.)

இதுவுமது:—

अनेन ब्रह्मानन्देन हरिहरः सर्वदा प्रीयात् च स्वाश्रितान् शुद्धमानसान् सर्वान् प्राणिनः पायात् ॥

(சு-ம்.)

இந்தப் பிரஹ்மாநந்தத்தின் நிரூபணத்தினால் ஹரிஹரர் அதாவது விஷ்ணுவினும் வேறாகாத சிவன் எப்போதும் பிரசன்னராகுக. தன்னை ஆசிரயித்த சுத்தமனதுடைய சகல பிராணிகளையும் ஜனனமரணாதிவடிவ சம்சாரத்தினின்றும் இரக்ஷிக்க. (ருடு)

தஞ்சமென் றடைந்த மாந்தர் சனனநோய் சமிக்கும் மேலோன்
றஞ்சைமா நகரில் விண்டுத் தனிப்பெயர் தாங்கி யார்க்கு
மெஞ்சலி லின்ப வீட்டை யினிதருள் குரவன் காக்க
வஞ்சக மிலாத விந்த பாவுரை தழைக்கு மாறே.

பிரஹ்மாநந்தத்தில்

ஐந்தாவது அத்தியாயமாகிய,

விஷயாநந்தமென்னும்

பதினைந்தாம் பிரகரணம் முடிந்தது.

## ॥ समाप्तोऽयं ग्रंथः ॥

# ஸ்ரீ பஞ்சதசி

## முற்றிற்று.

